21st August 1961]

SRI A. A. RASHEED : May I know whether the electrification of Madras-Arkonam line will be included in the Third Plan and whether it has been accepted by the Railway Board?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : So far there is no possibility of immediately taking up the Madras-Arkonam electrification.

SRI M. KALYANASUNDARAM : ஸார், கடலூர்-சேலம்வரை மீட்டர் கேஜாக உள்ள லயினை பிராட் கேஜாகப் போடும் உத்தேசம் இந்த அரசாங்கம் சிபார்சு செய்து, மத்திய அரசாங்கம் கைவிட்டதா அல்லது நம்முடைய அரசாங்கமே கைவிட்டு விட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த அரசாங்கம் கைவிட வில்லை. அதுவும் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது.

SRI A. V. P. ASAITHAMBI : கனம் தலைவர் அவர்களே, இந்த அரசாங்கம் சிபார்சு செய்துள்ளதாகச் சொல்லப்பட்ட இணைப்புக்கள் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கும்படி இந்த அரசாங்கம் சிபார்சு செய்திருக்கிறதா ? அல்லது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கும்படி சிபார்சு செய்யப்பட்டு, மத்திய சர்க்காரால் கைவிடப்பட்டு, அதை மீண்டும் சேர்க்கும்படி இந்த அரசாங்கம் சிபார்சு செய்திருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதிலே புறக்கணிப்பதற்கு என்று ஒன்றுமே இல்லை. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே பல லயின்களை சிபார்சு செய்திருந்தோம். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிச்சயம் இரண்டு லயின்கள் எடுத்துக்கொள்ளப் படும் என்று தெரியவருகிறது. அத்தனையும் ஒரே சமயத்தில் எடுத்துக் கொள்ளமுடியாது. பிரியாரிடிபடி தான் எடுத்துக்கொள்ளப்படும்.

SRI R. SRINIVASA IYER : ஸார், மதாரஸ்-செங்கல்பட்டு மின்சார ரயில்வே லயின் விஷயம் ரொம்ப நாளாக சொல்லப்பட்டு வருகிறது. அது இப்போது எந்த நிலைமையில் உள்ளது ? எப்போது எடுத்துக் கொள்ளப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்த வேலை எற்கனவே எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : தூத்துக்குடியிலிருந்து, சென்னை எழும்பூர் வரையுள்ள மீட்டர் கேஜ் மார்க்கத்தை, தூத்துக்குடி-திருச்சி வரை பிராட் கேஜாக மாற்றும் யோசனை இந்த அரசாங்கத்திடம் இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு ஒரு யோசனையும் இல்லை.

*Houses for Policemen*

* 1289 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any proposal to construct a housing colony for the men of the Special Armed Police Unit at Avadi;

(*b*) if so, when will the work be taken up; and

(*c*) the number of houses to be constructed?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The proposal has just been approved. The execution of the work will be taken up soon after the preliminaries are over.

(*c*) 195.

[21st August 1961

SRI A. A. RASHEED: What is the estimated cost of this housing project? Will this Colony accommodate the Southern Zone Police Force also?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: For the Southern Zone Police Force, that need not require special accommodation as such. For these quarters for the Special Armed Police the cost is Rs. 18,25,000.

*Caterpillar menace*

* 1290 *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீபத்தில் மதுரை ஜில்லா, உசிலம்பட்டி பகுதியில் கம்பளிச் பூச்சிகள் படையெடுப்பால் எத்தனை ஏக்கர் நிலக்கடலைப் பயிர் பாதிக்கப் பட்டது ?

(இ) அதனால் ஏற்பட்ட நஷ்டத்தின் மொத்த மதிப்பென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (அ) 12,397·75 acres.

(இ) Rs. 6·19 lakhs.

SRI N. R. THIAGARJAN: ஸார், மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் அந்தப் பகுதிக்குச் சுற்றுப் பிரயாணம் செய்ய வந்தபோது, கிட்டத்தட்ட 20 லட்சம் நஷ்டம் ஏற்பட்டிருக்குமென்று சொன்னார்கள். ஆகவே இனிமேல் இவ்வாறு நஷ்டமேற்படாது இருப்பதற்கு, பாதுகாப்பு அளிப்பதற்கு என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது ? எடுத்துக்கொள்ளப்போகிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் கூறிய மதிப்பு பிறர் கூறுவதைக் கேட்டுச் சொன்ன மதிப்பாகும். உத்தியோக பூர்வமாக மதிப்பு எடுத்ததில் 619,000 என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது கம்பளிப்பூச்சி என்று சொல்லப் படுகிறது. இம்மாதிரித் தொல்லைகள் ஏற்படும் காலங்களில், அவ்வப்போது அந்தத் தொல்லைகளைச் சமாளிப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகிறது.

SRI P. K. MOOKIAH THEVAR: ஸார், நமது மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் அங்கு வந்தபோது, நஷ்டமேற்பட்டதைப் பார்த்து தக்க பாதுகாப்பு அளிப்பதற்கு பல காரியங்கள் செய்வதாகச் சொல்லி, அவைகள் பத்திரிகைகளில் கூட வெளிவந்தது. அந்தக் காரியங் கள் நடந்தேறியதா அல்லது இல்லையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அமைச்சர் அவர்கள் கூறியவைகள் எல்லாம் கவனிக்கப்பட்டு, நிறைவேற்றப்பட்டுத்தான் வருகிறது.

SRI N. K. PALANISAMI: கோவை ஜில்லாவில் பொள்ளாச்சியில் ஆகாய விமானத்திலிருந்து மருந்தை ஸ்ப்ரே செய்து ஓரளவுக்கு வெற்றி கண்டிருப்பதனால், இதை மாகாணத்தில் வேறு இடங்களில் விஸ்தரிப்பதற்கு சர்க்காரிடம் திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எங்கெங்கு ஆகாய விமானத்திலிருந்து பூச்சி மருந்துகளை அடித்து பூச்சிகளை அழிக்க முடி யுமோ அதில் கவனம் செலுத்தப்பட்டுத்தான் வருகிறது. பொள்ளாச்சியில் பூச்சி மருந்து அடித்தோம். ஆனால் அங்கே கால் பங்கு பூச்சிகள் 'அண்டர்கிரௌண்டுக்கு' போய்விட்டன. (சிரிப்பு.) மறுபடியும் பருவ காலத்தில் வெளிவரும். அப்படி வெளிவருகிற பொழுது பூச்சி மருந்து தெளித்து எல்லாவற்றையும் சேர்த்து அழிக்க வேண்டும்.